முன்னாமுதுபொருட்குமுன்னாமுதுபொருளாய்ப்
பின்னும்புதுமைக்கும்பின்னாகும்பேரொளியாய்த்
தென்னாமதுரைத்திருவாலவாயுறையு
மென்னாயகனேயெளியேற்கிரங்காயோ. (௨0)

மண்ணாய்ப்புனலாய்க்கனலாய்வளியாகி
விண்ணாயிருசுடராயித்தனையும்வேறாகிப்
பண்ணாயிசையாய்ப்பனுவலாயெங்கண்ணுங்
கண்ணாயென்னாறுகண்காணாவாறென்கொல்லோ. (௨௧)

பொங்குஞ்சினமடங்கல்போன்றுருத்துவெங்கூற்ற
மங்கும்புரியாவருந்துன்பத்தாழ்ந்துநான்
மங்கும்படியறிந்தும்வந்தஞ்சலென்கிலையா
லெங்குஞ்செவியுடையாய்கேளாயோவென்னுணாயே. (௨௨)

பூட்டியருட்பாசமிருபாதம்பொறித்துடலிற்
கூட்டியடியாருளகப்படுத்தாட்கொண்டருமை
காட்டியவோவின்றென்னைக்கைவிட்டாய்வெய்யரெனை
யாட்டியொறுக்குமிடத்தாரோன்றுகொள்வாரே. (௨௩)

ஊராருனைச்சிரிப்பதோராயென்றுன்னடிமைக்
காராயடியேனயர்வேனஃதறிந்தும்
வாராயரசன்றமரிழைக்கும்வன்கண்ணோய்
பாராயுன்றன்மையிதுவோபரமேட்டி. (௨௪)

கலிநிலைத்துறை.

என்றிரங்குவோரிரங்கொலியிளஞ்சிறுரமுகை
சென்றுதாயர்தஞ்செவித்துளைநுழைந்தெனச்செல்லக்
குன்றிருஞ்சிலைகோட்டியகூடலாயகன்கேட்
டன்றுவன்சிறைநீக்குவான்றிருவுளத்தமைத்தான். (௨௫)

நந்தியாதியாழ்பெருங்கணநாதரைவிளித்தான்
வந்தியாவரும்பணிந்தனர்மன்னவற்கின்று
முந்தியாவணிமூலநாள்வந்ததுமுனிவு
சிந்தியாமுனம்பரியெலாஞ்செலுத்துவான்வேண்டும். (௨௬)

யாவரும்புனித்தியங்குறுநரியெலாமீட்டித்
தாவரும்பரியாக்கியத்தாம்பரிநடத்துஞ்
சேவகஞ்செய்வோராகிமுன்செல்லுமின்யாமும்
பாவகம்படவருதுமப்படியெனப்பணித்தான். (௨௭)

ஏகனையகனை யணிபூண்டெழுகணத்தவரு
நாகநாடரும்வியப்புறநரியெலாந்திரட்டி
வேகவாம்பரியாக்கியவ்வெம்பரிநடத்தும்
பாகராயினரவர்வரும்பரிசதுபகர்வாம். (௨௮)

தூக்கியார்த்தசெம்பட்டினர்சுரிகையர்தொடுதோல்
வீக்குகாலினரிருப்புடற்காப்பினர்வெருளி
னோக்குபார்வையர்புண்டரநுதலினரடியிற்
றூக்கியார்ப்பெழுநகையினர்தழன்றெழுசினத்தோர். (௨௯)

வட்டத்தோல்வரிபுறங்கிடந்தசையவைவடிவா
ளொட்டகையினர்சிலர்நெடுந்தோமரஞ்சுழல
விட்டகையினர்சிலர்வெரிநிடைநெடுவிசிகப்
புட்டில்வீக்கிவிற்றூக்கியபுயத்தினர்சிலரால். (௩0)

செம்படாஞ்செய்தபோர்வையர்சிலர்பசும்படத்தான்
மொய்ம்புவீக்கியகவயத்தர்சிலர்கருமுகில்போ
லம்புயம்புதைகாப்பினர்சிலர்சிலரவிரும்
பைம்பொன்வாணிறப்படாஞ்செய்குப்பாயத்தர்சிலரால். (௩௧)

பிச்சவொண்குடையார்பலர்கவரிவால்பிறங்கத்
தைச்சதண்குடையார்பலர்சல்லிசூழ்நாற்றி
வைச்சவண்குடையார்பலர்வாணிலாமுத்த
மொய்ச்சவெண்குடையார்பலர்மொய்ம்பினரிவருள். (௩௨)

தருமமாதிநாற்பொருளெனுந்தாளதுஞான
கருமகாண்டமாஞ்செவியதுகாட்சியைக்கடந்த
வொருமையாம்பரமபரமாமுணர்வெனுங்கண்ண
தருமையாம்விதிமுகத்ததுநிடேதவாலதுவால். (௩௩)

தந்திரங்களாற்புறவணிதரித்ததுவிரித்த
மந்திரங்களாற்சதங்கைதார்மணிச்சிலம்பணிந்த
தந்தரஞ்சுழல்சோமனுமருக்கனுமிதிக்குஞ்
சுந்தரப்பதம்பொறைகொளத்தூங்கிநுபுடைத்தால். (௩௪)

மாண்டதாரகப்பிரமமாங்கலினம்வாய்கிழியப்
பூண்டதாற்புறச்சமயமாம்பொருபடைமுரிய
மூண்டுபோரெதிர்விளைத்திகன்முடிப்பதுமுளரி
யாண்டகோமுகமந்திரமாகமேவியதால். (௩௫)

அண்டகோடிகளனைத்துமோர்பிண்டமாவடுக்கி
யுண்டநீரதாமுதுகின்மேலுபரிடக்கலனை
கொண்டவாவியவ்வதிகப்புரவிமேற்கொண்டான்
றொண்டர்பாசவன்றொடரவிழ்த்திடவருஞ்சோதி. (௩௬)

ஆனமந்திரக்கிழார்பொருட்டன்றியும்வென்றி
மீனவன்பிறப்பறுக்கவும்வார்கழல்வீக்கி
வானநாயகனேந்தியமறைபுறைகழித்த
ஞானவாள்புறவிருளையுநக்கிவாளெறிப்ப. (௩௭)

சாய்ந்தகொண்டையுந்திருமுடிச்சாத்தும்வாள்வைரம்
வேய்ந்தகண்டியுந்தொடிகளுங்குழைகளும்வினையைக்
காய்ந்தபுண்டரநுதலும்வெண்கலிங்கமுங்காப்பு
மாய்ந்ததொண்டர்தமகம்பிரியாதழகெறிப்ப. (௩௮)

பிறக்குமாசையோர்மறந்துமிங்கணுகன்மின்பிறப்பை
மறக்குமோசையோரிம்மெனவம்மினன்பரைவேந்
தொறுக்குநோய்களைவானெனவொருவனும்பிறவி
யறுக்கவந்தனனென்பபோற்பரிச்சிலம்பலம்ப. (௩௯)

கங்கையைச்சடைமுடியின்மேற்கரந்தனையவள்போ
லெங்கடம்மையுங்கரந்திடென்றிரந்துகாவேரி
துங்கபத்திரியாதியாநதிகளுஞ்சூழப்
பொங்கிவீழ்வபோலொலியலுங்கவரியும்புரள. (௪௰)

வாவிநாறியவாலிதழ்த்தாமரைமலரோ
னாவினானுமைநாயகனான்மறைபரியா
மேவினானெனத்தானொருவெண்குடையாகிப்
பாவினானெனமுடியின்மேற்பானிலாக்கால. (௪௧)

முறையினோதியபுராணமூவாறுநாமொழியு
மிறைவனுமிவன்படைத்தளித்தழிப்பவனிவனே
மறையெலாமுறையிடும்பரம்பொருளெனவாய்விட்
டறையுமாறுபோலியங்களீரொன்பதுமார்ப்ப. (௪௨)

மிடைந்தமரியவாம்பரித்திரண்மேற்றிசைநோக்கி
நடந்தநாயகனான்மறைப்புரவியுநாப்ப
ணடைந்ததாலெழுந்தூளிகளண்டமுந்திசையும்
படர்ந்தபோம்வழியாதெனமயங்கினான்பரிதி. (௪௩)

பள்ளமாக்குவதிடரினைப்பள்ளத்தைமேடு
கொள்ளவாக்குவபாரெலாம்விலாழிகொப்பளித்து
வெள்ளமாக்குவதூளியால்வெள்ளத்தைவெறிதா
யுள்ளதாக்குவபுள்ளுவவுருக்கொண்டபரிமா. (௪௪)

கொய்யுளைப்பரியெழுந்ததூள்கோப்பவான்கங்கை
வையையொத்ததேழ்பசும்பரிசெம்பரிமாவாச்
செய்தவொத்ததுசிந்துரந்திசைக்கயமுகத்துப்
பெய்தவொத்ததாலொத்ததுபெரும்பகன்மாலை. (௪௫)

விளம்புகின்றவச்சம்புவெம்பரித்திரண்மிதிக்குங்
குளம்புகிண்டியவெழுந்ததூழ்குன்றிறகரிந்தோன்
வளம்புகுந்தடைவார்குரவழிபுரிவேள்விக்
களம்புகைந்தெழுதோற்றமேயல்லதுகடாதால். (௪௬)

மட்புலந்திசைவான்புதைபூழியுண்மறைந்து
கொட்புறும்பரிசதங்கைதாமொலியினுங்குளிர்வான்
பெட்புறுங்குரலொலியினுஞ்செவியினிற்பிறிது
கட்புலங்களாற்கண்டிலர்வழிவரக்கண்டோர். (௪௭)

கலிவிருத்தம்.

தரங்கமெறிமுத்திரைவிலாழியலதார்மா
விரங்குமொலியல்லதிரையேங்குமொலியின்ன
துரங்கமலமற்றிவைசுரர்க்கரசனின்றும்
புரங்கொலவிடுத்திடவரும்புணரியென்பார். (௪௮)

இம்பருலகுள்ளவலபண்டினையபாய்மா
வும்பருலகாளிபரியேகொலதுவொன்றே
வெம்பரிதிவெம்பரிகொலேழவைகளேழும்
பைம்பரிகள்யாவினையபாய்பரிகளென்பார். (௪௯)

வெம்பணிகளைப்பொரவெகுண்டெழுவதேயோ
பைம்புனலுடுத்தமுதுபார்முதுகுகீறு
மும்பருலகைப்பொரவுருத்தெழுவதேயே
வம்பரமுகட்டளவடிக்குரமழுத்தும். (௫0)

உத்தரதிசைப்புரவிதெற்கடையுமாறு
மத்தகையதெற்குளவடக்கடையுமாறு
மித்தகைகுடக்கொடுகுணக்கடையுமாறுஞ்
சித்தர்விளையாடலின்வெளிப்படுதல்செய்யா. (௫௧)

